# ॥ श्री त्रिपुरसुन्दरीवेदपादस्तवः ॥

## த்ரிபுரஸுந்தரீ வேதபாதஸ்தவம்

(1)

वेदपादस्तवं वक्ष्ये देव्याः प्रियचिकीर्षया ।
यथामति मतिं देवस्तन्नो दन्तिः प्रचोदयात् ॥

வேதபாத ஸ்தவம் வக்ஷ்யே தேவ்யாஃ ப்ரியசிக்ர்ஷயா।
யதாமதி மதிம் தேவஃ தந்நோதந்திஃ ப்ரசோதயாத்॥

உலக நன்மை செய்ய வேண்டி தேவியின் வேதபாத ஸ்தவத்தை அறிவிற்கிசைந்தவாறு சொல்லப்போகிறேன். தந்திதேவன் (கணபதி) எனது புத்தியை ஊக்குவிக்க வேண்டும்.

(2)

अकिञ्चित्करकर्मभ्यः प्रत्याहृत्य कृपावशात् ।
सुब्रह्मण्यस्स्तुतावस्यां तन्नष्षण्मुखः प्रचोदयात् ॥

அகிஞ்சித்கர கர்மப்யஃ ப்ரத்யாஹ்ருத்ய க்ருபாவசாத்।
ஸுப்ரஹ்மண்யஃ ஸ்துதாவஸ்யாம் தந்நஃ ஷண்முகஃ ப்ரசோதயாத்॥

தயவுடன் ஸ்ரீசுப்ரஹ்மண்யர் வீணான கர்மாக்களிலிருந்து இழுத்து இந்த ஸ்தோத்ரத்தில் என்னை ஊக்குவிக்க வேண்டுமே।

(3)

अकारादिक्षकारान्तवर्णावयवशालिनी ।
वीणापुस्तकहस्ताऽव्यात् प्रणो देवी सरस्वती ॥

அகராதிக்ஷகாராந்தவர்ணாவயவசாலிநீ।
வீணாபுஸ்தகஹஸ்தாவ்யாத் ப்ரணோ தேவீ ஸரஸ்வதீ॥

அகாரம் முதல் க்ஷகாரம் வரையிலான வர்ணங்களின் அடையாளங்கொண்ட வீணை, புஸ்தகம் இவற்றைகையிலுடைய ஸரஸ்வதீ தேவி எங்களை காக்க வேணும்.

(4)

या वर्णपदवाक्यार्थगद्यपद्यस्वरूपिणी ।
वाचि नर्तयतु क्षिप्रं मेधां देवी सरस्वती ॥

யா வர்ணபத வாக்யார்த்த கத்ய பத்ய ஸ்வரூபிணீ।
வாசி நர்தயது க்ஷிப்ரம் மேதாம் தேவீ ஸரஸ்வதீ॥

எழுத்து, சொல், வாக்யம், அர்த்தம், கத்யம், பத்யம் ஆகிய பல தோற்றங்கள் கொண்ட ஸரஸ்வதீ தேவி என் வார்த்தையில் புத்தியை நடனமாடச் செய்யட்டும்.

(5)

उपास्यमाना विप्रेन्द्रैः संध्यासु च तिसृष्वपि ।
सद्यः प्रसीद मे मातः संध्याविद्ये सरस्वति ॥

உபாஸ்யமானா விப்ரேந்த்ரைః ஸந்த்யாஸுசதிஸ்ருஷ்வபி
ஸத்யஃப்ரஸீதமே மாதஃ ஸந்த்யா வித்யே ஸரஸ்வதி॥

மூன்று ஸந்த்யாகாலங்களிலும், பிராமணோத்தமர்களால் உபாஸிக்கப்படும் ஸந்த்யா வித்யையான ஸரஸ்வதி! எனக்கு உடன் அருள் பாலிப்பாயாக.

(6)

मन्दा निन्दालोलुपाऽहं स्वभावा -
देतत्स्तोत्रं पूर्यते किं मयेति ।
मा ते भीतिर्हे मते त्वादृशाना -
मेषा नेत्री राधसा सूनृतानाम् ॥

மந்தா நிந்தாலோலுபா-஽ஹம் ஸ்வபாவாத்
ஏதத்ஸ்தோத்ரம் பூர்யதே கிம்மயேதி।
மாதே பீதிர்ஹேமதே த்வாத்ருசாநாம்
ஏஷாநேத்ரீராதஸா ஸூந்ருதாநாம்॥

ஹே புத்தியே! நீ குறைவுள்ளதாலும், பிறரை இகழ்வதையே இயற்கையாக நேசிப்பதாலும் இந்த ஸ்தோத்ரம் எப்படி முடிக்கப்படும் என்று பயப்பட வேண்டாம். உன்னைப் போன்றவர்களை நன்னெறிப்படுத்த இந்த தேவி முனைப்புடன் முன் நிற்கிறாளே!

(7)

तरङ्गभृकुटीकोटिभंग्या तर्जयते जराम् ।
सुधामयाय शुभ्राय सिन्धूनां पतये नमः ॥

தரங்க ப்ருகுடீ கோடி பங்க்யா தா்ஜயதே ஜராம்।
ஸுதாமயாய சுப்ராய ஸிந்தூநாம் பதயே நமஃ॥

தனது அலையாகிய புருவநெறித்தலால் தள்ளாத வயதை கடிந்து கொள்ளும் சுத்த அம்ருதக் கடலுக்கு என் நமஸ்காரங்கள்,

(8)

तस्य मध्ये मणिद्वीपः कल्पकाराममभूषितः ।
अस्तु मे ललितावासः स्वस्तिदा अभयङ्करः ॥

தஸ்ய மத்யே மணித்வீபஃ கல்பகாராம பூஷிதஃ
அஸ்துமே லலிதாவாஸஃ ஸ்வஸ்திதா அபயங்கரஃ॥

அந்த அம்ருதக் கடலின் நடுவில் கல்பக மரச்சோலை சூழ்ந்த மணித்வீபம் என்ற அந்த அழகிய லலிதா தேவியின் தங்குமிடம் எனக்கு அபயம் அளித்து நல்லனவற்றை (க்ஷேமத்தை) யருளுவதாக ஆகட்டும்.

(9)

कदम्बमञ्जरीनिर्यद्वारुणीपारणोन्मदैः ।
द्विरेफैर्वर्णनीयाय वनानां पतये नमः ॥

கதம்பரீ மஞ்ஜரீ நிர்யத்வாருணீ பாரணோன்மதைஃ
த்விரேபைர்வர்ணனீயாய வநாநாம் பதயே நமஃ॥

கதம்பப் பூக்கொத்திலிருந்து சொட்டும் தேனைப் பருகி மதங்கொண்ட வண்டினங்கள் பாடும் சீர்மிகுக் காட்டிற்கு நமஸ்காரம்.

(10)

तत्र वप्रावलीलीला गगनोल्लंघिगोपुरम् ।
मातः कौतूहलं दद्यात् संहार्यं नगरं तव ॥

தத்ரவப்ராவலீலீலா ககநோல்லங்கிகோபுரம்।
மாதஃ கௌதூஹலம் தத்யாத் ஸம்ஹார்யம் நகரம்தவ॥

அந்த கதம்ப வனத்தில் அடுக்கு அடுக்காக அமைந்ததும், வானமளாவியதுமான கோபுரத்தையுடைய முழுமையானதும் அழகியதுமாகிய உனது நகரம், ஹே அன்னையே! குதூகலமளிக்கட்டும்!

(11)

मकरन्दझरीमज्जन्मिलिन्दकुलसंकुलाम् ।
महापद्माटवीं वन्दे यशसा संपरीवृताम् ॥

மகரந்தஜரீ மஜ்ஜந்மிலிந்தகுல ஸங்குலாம்।
மஹாபத்மாடவீம் வந்தே யசஸா ஸம்பரீவ்ருதாம்॥

மகரந்தப்பெருக்கில் மயங்கி மூழ்கிய தேன்வண்டுக் கூட்டம் மிளிரும் புகழ்மிக்க பத்மாடவியைப் போற்றுகிறேன்.

(12)

तत्रैव चिन्तामणितोरणार्चिभि-
विनिर्मितं रोपितरत्नशृङ्गम् ।
भजे भवानीभवनावतंस -
मादित्यवर्णं तमसः परस्तात् ॥

தத்ரைவ சிந்தாமணி தோரணார்சிபிஃ
விநிர்மிதம் ரோபிதரத்னச்ருங்கம்।
பஜே பவாநீ பவநாவதம்ஸம்
ஆதித்யவர்ணம் தமஸஃ பரஸ்தாத்॥

அந்த பத்மாடவியில்தானே நினைத்ததைக் கொடுக்கவல்ல சிந்தாமணியின் எழில்மிகு ஒளியால் நிர்மாணித்த, இரத்தின கலசம் பதித்த பவானியின் அரண்மனை உள்ளது. அது இருட்டிற் (அஞ்ஞானத்திற்)கப்பால் சூர்ய பிரகாசமாய் உள்ளது. அதை நான் உபாஸிக்கிறேன்.

(13)

मुनिभिस्स्वात्मलाभाय यच्चक्रं हृदि सेव्यते ।
तत्र पश्यामि बुद्ध्या तदक्षरे परमे व्योमन् ॥

முனிபிஃ ஸ்வாத்மலாபாய யத்சக்ரம்ஹ்ருதிஸேவ்யதே।
தத்ரபச்யாமி புத்யா ததக்ஷரே பரமே வ்யோமன்॥

முனிவர்கள், தங்கள் ஆத்மஸ்வரூபம் அறியவேண்டிய ஹ்ருதயத்தில் எந்த சக்ரத்தை சேவிக்கிறார்களோ அதை ப்ரணாவாகாரமான ஆகாயவெளியில் அறிவால் காண்கிறேன்.

(14)

पञ्चब्रह्ममयो मञ्चस्तत्र यो बिन्दुमध्यगः ।
तव कामेशि वासोऽयमायुष्मन्तं करोतु माम् ॥

பஞ்சப்ரஹ்மமயோ மஞ்சஃ தத்ர யோ பிந்துமத்யகஃ
தவகாமேசிவாஸோ-ऽயமாயுஷ்மந்தம் கரோதுமாம் ॥

அங்கு பிந்து மத்யத்தில் ஐந்து ப்ரம்ஹமமயமான மஞ்சத்தில், ஹே காமேச்வரி! நீ வசிப்பது என்னை நீடுழிகாலம் ஆயுஷ்மானாக காக்க வேண்டியல்லவா!

(15)

नानारत्नगुलुच्छालीकान्तिकिम्मीरितोदरम् ।
विमृशामि वितानं तेऽतिश्लक्ष्णमतिलोमशम् ॥

நாநாரத்னகுலுச்சாலீகாந்திகிம்மீரிதோதரம் ।
விம்ருசாமி விதாநம்தே அதிச்லக்ஷ்ணமதிலோமசம் ॥

பற்பல ரத்னக் குவியல்களின் காந்தியினால் பலநிறமாக்கப்பட்ட நடுபாகங் கொண்ட அந்த உனது விமானத்தை உன்னிப் பார்க்கிறேன். அது மிக வழவழப்பாகவும், நேர்த்தியான ரோமவரிசையுடையதாகவும் உள்ளது.

(16)

पर्यङ्कतल्पोपरि दृश्यमानं
सबाणचापाङ्कुशपाशपाणिम् ।
अशेषभूषारमणीयमीडे
त्रिलोचनं नीलकण्ठं प्रशान्तम् ॥

பர்யங்கதல்போபரிதர்சநீயம்
ஸபாணசாபாங்குச பாசபாணிம் ।
அசேஷபூஷா ரமணீயமீடே
த்ரிலோசனம் நீலகண்டம் ப்ரசாந்தம் ॥

கட்டிலின் மீது அமைந்த தல்பத்தில் அமர்ந்த அழகிய முக்கண்ணனை, சாந்தமூர்த்தியான நீலகண்டனை வழிபடுகிறேன். அவர் அனைத்து ஆடையாபரணங்களாலும், பாணத்துடன் வில், அங்குசம், பாசம் இவற்றாலும் காட்சிக்கினியவராக இருக்கிறார்.

(17)

जटारुणं चन्द्रकलाललाम –
मुद्वेललावण्यकलाभिरामम् ।
कामेश्वरं कामशरासनाङ्कं
समस्तसाक्षिं तमसः परस्तात् ॥

ஜபாருணம் சந்த்ரகலாலலாம்ம்
உத்வேலலாவண்ய கலாபிராமம் ।
காமேச்வரம் காமசராஸ நாங்கம்
ஸமஸ்தசாக்ஷிம் தமஸஃ பரஸ்தாத் ॥

மேலும் அவர் ஜடை தரித்து, சந்திரப் பிறையுமணிந்து, அளவில்லாத அழகு படைத்த காமேச்வரராக காட்சியளிக்கிறார். மன்மத வில்லை அடையாளமாகக் கொண்டிருக்குமவர் அஜ்ஞான இருளினப்பால் ஸர்வ ஸாக்ஷியாகவும் விளங்குகிறார்.

(18)

तत्र कामेशवामाङ्के खेलन्तीमलिकुन्तलाम् ।
सच्चिदानन्दलहरीं महालक्ष्मीमुपास्महे ॥

தத்ர காமேசவாமாங்கே கேலந்தீ மலிகுந்தலாம் ।
ஸச்சிதானந்தலஹரீம் மஹாலக்ஷ்மீமுபாஸ்மஹே ॥

அங்கே காமேச்வரரின் இடது தொடையில் உல்லாசமாக இருக்கும் சுருட்டை குந்தலங்களுடன் ஸத்-சித்-ஆனந்த ஸ்வரூபிணியான மஹாலக்ஷ்மியை உபாஸிக்கிறேன்.

(19)

चारुगोरोचनापङ्कजम्बालितघनस्तनीम् ।
नमामि त्वामहं लोकमातरं पद्ममालिनीम् ॥

சாருகோரோசனாபங்கஜம்பாலிதகனஸ்தனீம் ।
நமாமி த்வாமஹம் லோகமாதரம் பத்மமாலினீம் ॥

நறுமண கோரோசனைக் குழம்பு பூசப்பட்ட கனமான ஸ்தனங்கள் கொண்ட தாமரை மாலைகளுடன் விளங்கும் உலக அன்னையான உன்னை வணங்குகிறேன்.

(20)

शिवे नमन्निर्जरकुञ्जरासुर –
प्रतोलिकामौलिमरीचिवीचिभिः ।
इदं तव क्षालनजातसौभगं
चरणं नो लोके सुधितां ददातु ॥

சிவே நமந்நிர்ஜரகுஞ்ஜராஸுர –
ப்ரதோலிகா மௌலி மரீசி வீசிபிঃ।
இதம் தவ க்ஷாலந ஜாத ஸௌபகம்
சரணம் நோ லோகே ஸுதிதாம் ததாது ॥

ஹே மங்கலஸ்வரூபிணி! நமஸ்கரிக்கும் தேவர்கள் மற்றும் குஞ்ஜராஸுரனின் பிரதானவீதி போன்ற தலைவரிசையின் அலைகளால் அலம்பப்பெற்று அழகேறிய இந்த உனது சரணம் எங்களுக்கு உலகில் நல்வாழ்க்கையை அளிக்கட்டும்.

(21)

कल्पस्यादौ कारणेशानपि त्रीन्
स्रष्टुं देवि! त्रीन् गुणानादधानाम् ।
सेवे नित्यं श्रेयसे भूयसे त्वां
अजामेकां लोहितशुक्लकृष्णाम् ॥

கல்பஸ்யாதௌ காரணேசாநபித்ரீந்
ஸ்ரஷ்டும் தேவி த்ரீந் குணாநாததாநாம்।
ஸேவே நித்யம் ச்ரேயஸே பூயஸே த்வாம்
அஜாமேகாம் லோஹித சுக்ல க்ருஷ்ணாம் ॥

யுகத்தின் தொடக்கத்தில் மூன்று காரணமூர்த்திகளைத் தோற்றுவிக்க மூன்று குணங்களைக் கொண்டிருக்கிற உன்னை மிகுந்தசிரேயஸ் கிடைப்பதற்காக எப்பொழுதும் சேவிக்கிறேன். நீ பிறப்பில்லாத ஒருவளே முக்குணத்தோற்றமாகி சிவப்பு, வெள்ளை, கருப்பு ஆகிய நிறங்கள் கொண்டவளாகத் தோன்றுகிறாயே!

(22)

केशोद्भूतैरद्भुतामोदपूरै –
राशाबृन्दं सान्द्रमापूरयन्तीम् ।
त्वामानम्य त्वत्प्रसादात् स्वयंभू–
रस्मान्मायी सृजते विश्वमेतत् ॥

கேசோத்பூதைரத்புதாமோதபூரை:
ஆசாப்ருந்தம் ஸாந்த்ர மாபூரயந்தீம்।
த்வாமானம்ய த்வத்ப்ரஸாதாத்ஸ்வயம்பூ:
அஸ்மான்மாயீ ஸ்ருஜதே விச்வமேதத் ॥

கேசங்களினின்று வெளியாகும் அத்புதமான வாஸனைப் பெருக்கால் திசைகளை நெகிழும்படி நிரப்புகின்ற உன்னை வணங்கியல்லவா உன் கருணையால் பிரம்மதேவன் எங்களையும் இவ்வுலகையும் சிருஷ்டிக்கிறார்.

(23)

अर्धोन्मीलद्यौवनोद्दामदर्पा
दिव्याकल्पैरर्पयन्तीं मयूखान् ।
देवि ध्यात्वा त्वां पुरा कैटभारिः
विश्वं बिभर्ति भुवनस्य नाभिः ॥

அர்தோன்மீலத்யௌவநோத்தாமதர்பாம்
திவ்யாகல்பைரர்பயந்தீம் மயூகான்।
தேவி த்யாத்வா த்வாம் புரா கைட பாரி:
விச்வம் பிபர்தி புவனஸ்ய நாபி:॥

ஓரளவே தோன்றிய யௌவநத்தின் கட்டுக்கடங்காத செருக்கு தோன்றும்படி திவ்யமான ஆபரணங்களால் ஒளிபரப்பிக் கொண்டிருக்கும் உன்னை தியானித்து முன்பு விஷ்ணு இவ்வுலகின் அச்சாணி போன்றிருந்து இன்றுவரை காத்து வருகிறார்.

(24)

कल्हारश्रीमञ्जरीपुञ्जरीतिं
धिक्कुर्वन्तीमम्ब ते पाटलिम्ना ।
मूर्तिं ध्यात्वा शाश्वतीं भूतिमाय –
न्निन्द्रो राजा जगतो य ईशे ॥

கல்ஹார ஶ்ரீமஞ்ஜரீபுஞ்ஜரீதிம்
திக்குர்வந்தீமம்பதே பாடலிம்நா ।
மூர்திம் த்யாத்வா சாச்வதீம் பூதிமாயந்
இந்த்ரோ ராஜா ஜகதோ ய ஈசே ॥

ஹே அம்ப! செந்நிறத்தால் செந்தாமரைக் கொத்தை சீர்குலைத்த உன் மூர்த்தியை தியானித்து அழியாச்செல்வம் பெற்ற இந்திரன், இவ்வுலகிற்கு திறம் படைத்த ராஜாவாக ஆகியுள்ளான்!

(25)

देवतान्तरमन्त्रौघजपश्रीफलमूलया ।
जापकस्तव देव्यन्ते विद्यया विन्दतेऽमृतम् ॥

தேவதாந்தரமந்த்ரௌகஜபஶ்ரீபலபூதயா। (மூலயா)
ஜாபகஸ்தவதேவ்யந்தே வித்யயா விந்ததே - ம் ருதம் ॥

மற்ற தேவதைகளின் மந்திரங்களை ஜபம் செய்வதன் பயனாக ஏற்பட்ட பேரறிவினால் ஹே தேவி! அந்த ஜபம் செய்தவன் உனது மந்திரங்களை ஜபித்து கடைசியாக அம்ருதத்தை (மோக்ஷத்தைப்) பெறுகிறான்.

(26)

पुंस्कोकिलकलक्वाणकोमलालापशालिनि ।
भद्राणि कुरु मे मातर्दुरितानि परासुव ॥

பும்ஸ்கோகில கலக்வாண கோமலாலாபசாலினி।
பத்ராணி குருமே மாதஃ துரிதாநி பராஸுவ ॥

ஹே அன்னையே! ஆண்குயிலின் மென்மையான குரலையொத்த அழகிய பேச்சையுடைய நீ எனது பாபங்களைப் போக்கி மங்களங்களை விளைவிப்பாயாக!

(27)

अन्तेवासिन्नस्ति चेत्ते मुमुक्षा
वक्ष्ये युक्तिं मुक्तसर्वेषणस्सन् ।
सद्भ्यस्साक्षात्सुन्दरीं ज्ञप्तिरूपां
श्रद्धाभक्तिध्यानयोगादवेहि ॥

அந்தேவாஸிந் அஸ்திசேத்தே முமுக்ஷா
வக்ஷ்யே யுக்திம் முக்தஸர்வைஷணஃஸன்।
ஸத்ப்யஃ ஸாக்ஷாத் ஸௌந்தரீம் ஜ்ஞப்திரூபாம்
ஸ்ரீத்தா பக்தி த்யானயோகாத் அவேஹி॥

சிஷ்யனே! உனக்கு மோக்ஷம் கிடைக்க வேணும் என்ற விருப்பமிருந்தால் ஒருவழி சொல்கிறேன் கேள் - எல்லா காமனைகளையும் விட்டொழித்து, நல்லோரிடமிருந்து சிரத்தை - பக்தி, த்யானம், யோகம் இவற்றின் மூலம் பேரறிவேயுருவான ஸௌந்தரியை நேரில் கண்டறிவாயாக.

(28)

षोढान्यासादिदेवैश्च सेविता चक्रमध्यगा ।
कामेशमहिषी भूयष्षोडशी शर्म यच्छतु ॥

ஷோடாந்யாஸஆதிதேவைஸ்ச ஸேவிதாசக்ரமத்யகா।
காமேசமஹிஷீ பூயஃ ஷோடசீ சர்ம யச்சது॥

ஆறுவித ந்யாஸம் முதலியவற்றினாலும், தேவர்களாலும் ஸேவிக்கப்பட்ட ஸ்ரீசக்ரமத்யத்தில் வீற்றிருப்பவளான ஸ்ரீகாமேசமஹிஷியான ஷோடசீ எனக்கு மங்களம் அளிக்கட்டும்.

(29)

शान्तो दान्तो देशिकेन्द्रं प्रणम्य
तस्यादेशात्तारकं मन्त्रतत्त्वम् ।
जानीते चेदम्ब धन्यस्समानं
नातः परं वेदितव्यं न किञ्चित् ॥

சாந்தோ தாந்தோ தேசிகேந்த்ரம் ப்ரணம்ய
தஸ்யாதேசாத் தாரகம் மந்த்ரதத்வம்।
ஜாநீதேசேத் அம்ப தன்யஃ ஸமாநம்
நாதஃபரம் வேதிதவ்யம் ஹிகிஞ்சித்॥

புலனடக்கமும், மனஅமைதியும் பெற்று, நல்ல குருவை நாடி வணங்கி, அவனருளால் தாரக மந்திரத்தின் தத்வம் அறிவானாகில், அம்ப! அந்த அதிர்ஷ்டசாலி அதையொத்த வேறொன்றை அறிய வேண்டியதில்லை.

(30)

त्वमेव कारणं कार्यं क्रिया ज्ञानं त्वमेव हि ।
त्वामम्ब न विना किञ्चित् त्वयि सर्वं प्रतिष्ठितम् ॥

த்வமேவ காரணம் கார்யம் க்ரியா ஜ்ஞானம் த்வமேவச ।
த்வாமம்ப நவிநா கிஞ்சித் த்வயி ஸர்வம் ப்ரதிஷ்டிதம் ॥

ஹே அம்ப! நீயே காரணமும், கார்யமும் ஆக இருக்கிறாய். செயலும் ஞானமும் நீயே! உன்னையன்றி வேறொன்றில்லை, உன்னிடமே எல்லாம் நிலைபெற்றிருக்கிறது.

(31)

परागमद्रींद्रसुते त्वदंघ्रि –
सरोजयोरम्ब दधामि मूर्ध्ना ।
अलंकृतं वेदवधूशिरोभि –
र्यतो जातो भुवनानि विश्वा ॥

பராக மத்ரீந்த்ரஸுதே தவாங்க்ரி-
ஸரோஜயோரம்ப ததாமி மூர்த்நா ।
அலங்க்ருதம் வேதவதூசிரோபிஃ
யதோ ஜாதோ புவநாநி விச்வா ॥

ஹே அம்ப பார்வதி! வேத முடிவான உபநிஷத்துக்களில் போற்றிக் கூறப்பட்ட உனது திருவடித் தாமரையின் பொடிகளை எனது தலைமீது தாங்குகிறேன், அவை மூலமாகத்தானே இந்த அனைத்துலகும் உண்டாயிற்று.

(32)

दुष्टान्दैत्यान्हन्तुकमां महर्षीन्
शिष्टानन्यान्पातुकामां कराब्जैः ।
अष्टाभिस्त्वां सायुधैर्भासमानां
दुर्गां देवीं शरणमहं प्रणद्ये ॥

துஷ்டா ந்தைத்யாந் ஹந்துகாமாம் மஹர்ஷீந்
சிஷ்டாநந்யான்பாது காமாம் கராப்ஜைஃ ।
அஷ்டாபிஸ்த்வாம் ஸாயுதைர்பாஸமாநாம்
துர்காம் தேவீம் சரணமஹம் ப்ரபத்யே ॥

துஷ்ட ராக்ஷஸர்களை அழிக்கவும், மஹர்ஷிகளையும் மற்ற சிஷ்டர்களையும் காக்கவும் திருவுள்ளங் கொண்டு, ஆயுதங்கள் தாங்கிய எட்டு புஜங்களோடு விளங்கும் துர்காதேவியை சரண் அடைகிறேன்.

(33)

देवि सर्वानवद्याङ्गि त्वामनादृत्य ये क्रियाः ।
कुर्वन्ति निष्फलास्तेषामदुग्धा इव धेनवः ॥

தேவி ஸர்வாநவத்யாங்கி த்வாமநாத்ருத்யயே க்ரியாঃ।
குர்வந்தி நிஷ்பலாஸ்தேஷா மதுக்தா இவதேநவঃ॥

ஹே தேவி! உன்னை முன்நிறுத்தாமல் எவரெவர் கர்மாக்களை செய்கிறார்களோ, அவர்களின் அக் கர்மாக்கள் கறவை இல்லாத மாடுகள் போல பயனற்றவை.

(34)

नाहं मन्ये दैवतं मान्यमन्यत्
त्वत्पादाब्जादम्बिके कुम्भजाद्याः ।
ये ध्यातारो भक्तिसंशुद्धचित्ताः
परामृतात्परिमुच्यन्ति सर्वे ॥

நாஹம் மந்யே தைவதம் மாந்ய மந்யத்
த்வத் பாதாப்ஜாத் அம்பிகே கும்பஜாத்யாঃ।
யே த்யாதாரோ பக்திஸம்சுத்த சித்தாঃ
பராம்ருதாத் பரிமுச்யந்தி ஸர்வே॥

ஹே அம்பிகே! ன்னைக் காட்டிலும் போற்றுதற்குரிய வேறு தெய்வம் உண்டென நான் எண்ணவில்லை. ஏனெனில் அகஸ்த்யர் முதலிய முனிவர் பக்தியால் தூய்மை பெற்று உன்னையே தியானம் செய்து மரண பயத்திலிருந்து விடுபடுகிறார்களே!

(35)

कुर्वाणोऽपि दुरारम्भान् तव नामानि शाम्भवि ।
प्रजपन्नेति मायान्तमतिमृत्युं तराम्यहम् ॥

குர்வாணோ-ऽபி துராரம்பாந் தவ நாமாநிசாம்பவி।
ப்ரஜபந்நேதி மாயாந்தமதி ம்ருத்யும் தராம்யஹம்॥

கெட்ட கார்யங்களைச் செய்பவனும், ஹே சாம்பவி! னது நாமாக்களை ஜபிப்பவன் மாயையை விட்டு அகல்வான். ானே மரணத்தை விட்டு நீங்குவேனே!

(36)

कल्याणि त्वं कुन्दहासप्रकाशैः
अन्तर्ध्वान्तं नाशयन्तीक्षणेन ।
हन्तास्माकं ध्यायतां त्वत्पदाब्जं
उद्यतिष्ठ महते सौभगाय ॥

கல்யாணி த்வம் குந்தஹாஸப்ரகாசைঃ
அந்தர் த்வாந்தம் நாசயந்தீ க்ஷணேந।
ஹந்தாஸ்மாகம் த்யாயதாம் த்வத்பதாப்ஜம்
உச்சதிஷ்ட மஹதே ஸௌபகாய॥

ஹே கல்யாணி! குந்த புஷ்பமெனத் திகழும் புன்சிரிப்பால் ங்கள் மனஇருளை நொடியில் போக்கும் நீ, உனது திருவடித் ாமரையை தியானிக்கும் எங்கள் நல்ல செல்வமிகு வாழ்வுக்கு ைனைந்து நிற்பாயே!

(37)

तितीर्षया भवाम्भोधेर्हयग्रीवादयः पुरा ।
अप्रमत्ता भवत्पूजां सुविद्वांसो वितेनिरे ॥

திதீர்ஷயா பவாம்போதேঃ ஹயக்ரீவாதயঃ புரா।
அப்ரமத்தாபவத் பூஜாம் ஸுவித்வாம்ஸோ விதேநிரே॥

முன்பு ஹயக்ரீவர் முதலியோர் ஸம்ஸாரக் கடலைக் கடக்க வண்டும் என்ற விருப்பத்துடன் சிறிதும் தவறின்றி உனது ஜையை செய்தனரே!

(38)

मद्वंश्या ये दुराचारा ये च सन्मार्गगामिनः ।
भवत्याः कृपया सर्वे सुवर्यन्तु यजमानाः ॥

மத்வம்ச்யாயே துராசாரா யேச ஸன்மார்ககாமிநঃ।
பவத்யாঃ க்ருபயாஸர்வேஸுவர்யந்து யஜமாநাঃ॥

*ஹே அம்ப! என் வம்சத்தைச் சேர்ந்தவர் கெட்டதைச் செய்பவராயினும், நல்வழிச் செல்பவராயினும், நினது க்ருபையால் உன்னை பூஜிப்பவராய் சுவர்கம் அடையட்டும்.*

(39)

श्रीचक्रस्थां शाश्वतैश्वर्यदात्रीं
पौण्ड्रं चापं पुष्पबाणान् दधानाम् ।
बन्धूकाभां भावयामि त्रिनेत्रां
तामग्निवर्णां तपसा ज्वलन्तीम् ॥

ஸ்ரீசக்ரஸ்தாம் சாச்வதைச்வர்யதாத்ரீம்
பௌண்ட்ரம் சாபம் புஷ்பபாணாந்ததாநாம்।
பந்தூகாபாம் பாவயாமி த்ரிநேத்ராம்
தாமக்னிவர்ணாம் தபஸா ஜ்வலந்தீம்॥

*ஸ்ரீசக்ரத்தில் இருப்பவளும் (அழிவற்ற) சாச்வதமான ஐச்வர்யத்தையருள்பவளும், கரும்பு வில்லையும், புஷ்ப பாணங்களையும் வைத்திருப்பவளும், செம்பருத்திப்பூ நிறமுள்ளவளும், முக்கண் படைத்தவளும், தீப்பிழம்போ வென்றிருப்பவளும், தவத்தால் ஜ்வலிக்கின்றவளுமான அம்பிகையை தியானிக்கிறேன்.*

(40)

भवानि तव पादाब्जनिर्णेजनपवित्रिताः ।
भवामयप्रशान्त्यै त्वामपो याचामि भेषजम् ॥

பவாநி தவ பாதாப்ஜ நிர்ணேஜன பவித்ரிதாঃ।
பவாமய ப்ரசாந்த்யை த்வாம் அபோயாசாமிபேஷஜம்॥

*ஹே அம்ப! பவாநி! உனது திருவடித் தாமரையை அலம்பியதால் சுத்தப்படுத்தப்பட்ட நீரையே சம்சார நோய் தணிய வேண்டி உன்னிடம் மருந்தாக யாசிக்கிறேன்.*

(41)

चिदानन्दसुधाम्भोधेस्तवानन्दलवोऽस्ति यः ।
कारणेशैस्त्रिभिस्साकं तद्विश्वमुपजीवति ॥

சிதானந்த ஸுதாம்போதே ஸ்தவானந்தலவோ஽ஸ்தியஃ।
காரணேசைஸ்த்ரிபிஃ ஸாகம் தத்விச்வமுபஜீவதி॥

சித்-ஆனந்தம் ஆகியவற்றின் கடலே போலிருக்கிற உனக்கு ஏதோ ஒரு ஆனந்தத்துளி உள்ளதே அதைத்தான் மூன்று காரண மூர்த்திகளுடன் இவ்வுலம் முழுதும் சார்ந்து நிற்கிறது.

(42)

नो वा यागैर्नैव पूर्तादिकृत्यैः
नो वा जप्यैर्नो महद्भिस्तपोभिः ।
नो वा योगैः क्लेशकृद्भिस्सुमेधा
निचाय्येतां शान्तिमत्यन्तमेति ॥

நோ வா யாகைர்நைவ பூர்தாதி க்ருத்யைஃ
நோவாஜப்யைர்நோ மஹத்பிஸ்தபோபிஃ।
நோவா யோகை க்லேசக்ருத்பிஃ ஸுமேதா
நிசாய்யேமாம் சாந்தி மத்யந்தமேதி॥

யாகங்களாலோ, ஸத்ரம், சாவடி, தண்ணீர்ப்பந்தல் வைத்தல், குளம் வெட்டுதல் போன்ற பூர்த கர்மாக்களாலோ, ஜபங்களாலோ, பெருந்தவத்தாலோ, யோகங்களாலோ, இன்னும் பலகாயக்லேசங்களாலோ கூட ஆவதொன்றுமில்லை. ஆனால் இந்த அம்பிக்கையை நல்ல புத்திசாலி ஆராய்ந்தறிந்து அமைதியடைவதுதான் உறுதி.

(43)

प्रातः पाहि महादेवि मध्याह्ने तु मृडप्रिये ।
सायं पाहि जगद्वन्द्ये पुनर्नः पाहि विश्वतः ॥

ப்ராதஃ பாஹி மஹாவித்யே மத்யாஹ்நே து ம்ருடப்ரியே।
ஸாயம் பாஹி ஜகத்வந்த்யே புனர்நஃ பாஹிவிச்வதஃ॥

காலையில் மஹாவித்யையாகவும், மத்யான்னத்தில் மஹேசன் மஹிஷியாகவும், மாலையில் உலகம் போற்றும் அன்னையாகவும் இருந்து காக்கவேணும். பின்னும் எங்களை எத்திசையிலும் காக்கவேணும்.

(44)

बन्धूकाभैर्भानुभिर्भासयन्ती
विश्वं शश्वत्तुङ्गपीनस्तनार्धा ।
लावण्याब्धे सुन्दरि त्वं प्रसादा –
दायुः प्रजाग्ं रयिमस्मासु धेहि ॥

பந்தூகாபைஃ பானுபிர் பாஸயந்தீ
விச்வம் சச்வத்துங்க பீநஸ்தநாட்யா।
லாவண்யாப்தே ஸுந்தரித்வம் ப்ரஸாதாத்
ஆயுஃப்ரஜாம் ரயிமஸ்மாஸு தேஹி॥

செம்பருத்தி நிறமான கிரணங்களால் உலகை பிரகாசிக்கச் செய்துகொண்டு, பருத்து உயரமான ஸ்தனங்கள் கொண்டவளாய் அழகின் கடலாய்த் திகழ்கிறாய். ஹே சுந்தரி! நீ மகிழ்ச்சியுடன் எங்களிடம் ஆயுள், நல்ல புத்ரன், செல்வம் இவற்றை நிரப்புவாயாக!

(45)

कर्णाऽऽकर्णय मे तत्त्वं या चिच्छक्तिरितीर्यते ।
त्रिर्वदामि मुमुक्षूणां सा काष्ठा सा परागतिः ॥

கர்ணாகர்ணய மே தத்வம் யாசித்சக்தி ரிதீர்யதே।
த்ரிர்வதாமி முமுக்ஷூணாம் ஸாகாஷ்டா ஸாபராகதிஃ॥

சித்சக்தி என்று சொல்லப்படும் அந்த தத்வமே மோக்ஷம் வேண்டுவோருக்கு உரிய இடமும் மேலான கதியும். இதை மும்முறை சொல்கிறேன். கேட்டு வைத்துக் கொள்ளலாம்.

(46)

वाग्देवीति त्वां वदंत्यम्ब केचित्
लक्ष्मीर्गौरीत्येवमन्येऽप्युशन्ति ।
शश्वन्मातः प्रत्यगद्वैतरूपा
शंसन्ति केचित्त्रिविदो जनाः ॥

வாக்தே வீதி த்வாம் வதந்த்யம்ப கேசித்
லக்ஷ்மீர்கௌரீத்யேவமன்யே -ऽப்யுசந்தி।
சச்வத் மாதஃ பிரத்யகத்வைதரூபாம்
சம்ஸந்தி கேசித் நிவிதோ ஜனாஃ॥

ஹே அம்ப ஒருசிலர் உன்னை வாக்தேவி என்கிறார்கள். வேறுசிலர் லக்ஷ்மி என்றும் கௌரீ என்றும் சொல்வார்கள். நன்கு அறிந்தவர் ஒன்றேயான ஆத்ம ஸ்வரூபமாகவே கூறிவருகின்றனர்.

(47)

ललितेति सुधापूरमाधुरीचोरमम्बिके ।
तव नामास्ति यत्तेन जिह्वा मे मधुमत्तमा ॥

லலிதேதி ஸுதாபூர மாதுரீசோரமம்பிகே।
தவ நாமாஸ்தி யத்தேநஜிஹ்வா மே மதுமத்தமா॥

ஹே அம்பிகே! அம்ருத தாரையின் இனிமையொத்த லலிதா என்ற உனது பெயர் இருக்கிறதே அதனால் என் நாக்கு இனிமை மிக்கதாக ஆகட்டும். /உள்ளது.

(48)

ये सम्पन्नास्साधनैस्तैश्चतुर्भिः
शुश्रूषाभिर्देशिकं प्रीणयन्ति ।
सम्यग्विद्वान् शुद्धसत्त्वान्तराणां
तेषामेवैतां ब्रह्मविद्यां वदेत ॥

யே ஸம்பந்நாஃ ஸாதநைஸ்தை ஸ்சதுர்பிஃ
சுச்ரூஷாபிஃ தேசிகம் ப்ரீணயந்தி।
ஸம்யக் வித்வான் சுத்த ஸத்வாந்தராணாம்
தேஷாமேவைதாம் ப்ரஹ்மவித்யாம்வதேத॥

நான்கு ஸாதனங்களையும் கைக்கொண்டு குருவை பணிவிடைகள்மூலம் மகிழ்வடையச்செய்கின்ற அந்த சுத்த ஸ்தவ குணமே நிரம்பியுள்ள உத்தமர்களின் உடமையானது ப்ரஹ்மவித்யை என்றறிய வேண்டும்.

(49)

अभिचारादिभिः कृत्यां यः प्रेरयति मय्युमे ।
तव हुङ्कारसंत्रस्ता प्रत्यक्कर्तारमृच्छतु ॥

அபிசாராதிபிঃ க்ருத்யாம் யঃ ப்ரேரயதிமய்யுமே।
தவ ஹுஂங்காரஸந்த்ரஸ்தா ப்ரத்யக்கர்தாரம்ருச்சது॥

*ஹே உமே! என் விஷயத்தில் ஏவல் முதலியவற்றால் கெட்ட தேவதையை தூண்டிவிடுவானாகில், அது உனது ஹூம் என்ற சப்தத்தால் பயமுற்று திரும்ப ஏவியவனையே போய்ச் சேரட்டும்.*

(50)

जगत्पवित्रि मामिकामपाहराशु दुर्जराम् ।
प्रसीद मे दयाधुनि प्रशस्तिमम्ब नः कृधि ॥

ஜகத்பவித்ரிமாமிகாமபாஹராசு துர்ஜராம்।
ப்ரஸீத மே தயாதுநி ப்ரசஸ்திமம்பநঃ க்ருதி॥

*ஹே உலகத்தை தூய்மைபடுத்துபவளே! தயாஸாகரி! என்னிடம் கருணை கூர்ந்து எனது தள்ளாமையை - கிழத்தன்மையைப் போக்கி புகழைப் பரப்புவாயாக!*

(51)

कदम्बारुणमम्बाया रूपं चिन्तय चित्त मे ।
मुञ्च पापीयसीं निष्ठां मा गृधः कस्यस्विद्धनम् ॥

கதம்பாருணமம்பாயா ரூபம் சிந்தய சித்தர மே।
முஞ்ச பாபீயஸிம் நிஷ்டாம் மா க்ருதঃ கஸ்யஸ்வித்தனம்॥

*என் மனமே! கதம்ப புஷ்பம் போன்று சிவந்த எனதன்னையின் உருவத்தையே நினை. பாபச் செயலில் ஈடுபாட்டை விட்டொழி! எவருடைய தனத்திற்காகவும் சபலப்படாதே!*

(52)

भण्डभण्डनलीलायां रक्तचन्दनपङ्किलः ।
अङ्कुशस्तव तं हन्याद्यश्च नो द्विषते जनः ॥

பண்டபண்டநலீலாயாம் ரக்த சந்தனபங்கிலஃ।
அங்குசஸ்தவதம் ஹந்யாத்யஸ்ச நோத்வேஷதே ஜநஃ॥

பண்டாசுரனை ஒடுக்கும் விளையாட்டில் ரக்தமாகிய சந்தனம் தோய்ந்த உனது அங்குசம் எங்களை வெறுக்கும் பகைவரை அழிப்பதாகட்டும்.

(53)

रे रे चित्त त्वं वृथा शोकसिन्धौ
मज्जस्यन्तर्वच्म्युपायं विमुक्त्यै ।
देव्याः पादौ पूजयैकाक्षरेण
तत्ते पदं सङ्ग्रहेण ब्रवीम्योम् ॥

ரேரே சித்த த்வம் வ்ருதா சோகஸிந்தெள
மஜ்ஜஸ்யந்தஃ வச்மிஉபாயம் விமுக்த்யை।
தேவ்யாஃ பாதெள பூஜயைகாக்ஷரேண
தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவீம்யோம்॥

ஓ மனமே! நீ வீணாக துன்பக் கடலுக்குள் மூழ்கிக் கொண்டிருக்கிறாயே, அதிலிருந்து விடுபட (மோக்ஷத்திற்கு) ஓர் உபாயம் சொல்கிறேன். தேவியின் சரணங்களை ஓர் அக்ஷரத்தினால் பூஜை செய். சுருக்கமாக அந்த பதம் எதுவெனில் 'ஓம்' என்பதே!

(54)

चञ्चद्बालातपज्योत्स्ना कलामण्डलशालिने ।
ऐक्षवाय नमो मातर्बाहुभ्यां तव धन्वने ॥

சஞ்சத்பாலாதப ஜ்யோத்ஸ்நா கலாமண்டலசாலினே।
ஐக்ஷவாய நமோ மாதஃ பாஹுப்யாம் தவதந்வனே॥

ஏ அன்னையே! உனது கைகளுக்கும், அதன் வசமான கரும்பு வில்லுக்கும் நமஸ்காரம். பரவும் வெயில், நிலவின் கலை மண்டலம் இவற்றையுடையதல்லவா அந்த வில்.